॥ श्री महागणपति पञ्चावरण स्तोत्रम् ॥

# ஸ்ரீ மஹாகணபதி பஞ்சாவரண ஸ்தோத்ரம்



VALLABHA VINAYAKA

உரைவிளக்கம் :
டாக்டர் S.P. சபாரத்தினம், M.A., Ph.D., F.I.S.E

A MIASTAC PUBLICATION

வெளியீடு : 1 குருவருள்

# ॥ श्री महागणपति पञ्चावरण स्तोत्रम् ॥

## ஸ்ரீ மஹாகணபதி பஞ்சாவரண ஸ்தோத்ரம்

உரைவிளக்கம் :
டாக்டர் S.P. சபாரத்தினம், M.A.,Ph.D., F.I.S.E
ஆகமப் பேராசிரியர்
(GSPIRC)
(Director, MIASTAC)



**The Meikandar Universal Institute of Agamic Studies**
**Temple Art and Culture**
Post Box : 3473
**Anna Nagar - Madras - 600 040**
**1993**

Publication No. 1



''आब्रह्मस्तम्बपर्यन्तं परमात्मस्वरूपकं ।
स्थावरं जङ्गमं चैव प्रणमामि जगन्मयम् ॥''

—श्री गुरुगीता

''ஆப்ரஹ்ம ஸ்தம்பபர்யந்தம் பரமார்த்த ஸ்வரூபகம்
ஸ்தாவரம் ஜங்கமம் சைவ ப்ரணமாமி ஜகன்மயம்''

—ஸ்ரீ குருகீதா

*''பிரம்மன் முதல் தூண் வரை உள்ள அனைத்தும் பரமாத்ம சொரூபமே. அசையாப் பொருளாகவும் அசையும் பொருளாகவும் பிரபஞ்சமயமாகவும் பிரகாசிக்கும் சிவகுருவை வணங்குகிறேன்''*

*— ஸ்ரீ குருகீதை*

*Price* : **10/-**

# முன்னுரை

கிடைப்பதற்கு அரியனவாகவும் மிகவும் பெரிய பேறுகளைத் தருபவையாகவும் விளங்கும் தோத்திர நூல்களை இறை அடியார்கள் எளிதில் பெருமாறு செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் மெய்கண்டார் ஆகமப்யிற்சி - கோயிற்கலை- பண்பாட்டு நிறுவனம் தோத்திர வெளியீட்டுப் பணியை மேற்கொண்டுள்ளது. சைவ ஆகமங்கள், தமிழ்த் திருமுறைகள் தொடர்பாகவும் இந்நிறுவனம் பல நூல்களை வெளியிட உள்ளது.

ஸ்ரீ மஹாகணபதி பஞ்சாவரண ஸ்தோத்ரம் - இந்நிறுவனத்தின் முதல் வெளியீடு. இது மஹா சைவதந்த்ரம் என்னும் பெரு நூலில் உள்ளது. பிங்களர் முதலான முனிவர்களின் வேண்டுகோட்கு இணங்கி ஸ்ரீ கண்ட சிவனுர் இத் தோத்திர நூலை வெளிப்படுத்தி அருளினுர் என்பது ஆகமவாக்கியத்தால் தெரியவருகிறது. சுலோகங்கள் தமிழில் கொடுக்கப்பட்டுத் தமிழ் உரையுடன் முதன் முதலாக இத்தோத்திரம் வெளியிடப்படுகிறது.

ஸ்ரீ மஹாகணபதிப் பெருமானுக்குரிய யந்திர வழிபாட்டு முறையில் இத்தோத்திரம் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. ஸ்ரீ கணபதி யந்த்ர பூஜையை விதிப்படிச் செய்வோர்க்கும் அவ்வாறுசெய்ய இயலாதோர்க்கும் இத்தோத்திர நூல் மிகப் பெரிய சாதனமாகத் திகழ்கிறது. தோத்திரத்தின் இறுதியில் பாராயண முறையைப் பற்றியும் பாராயணப் பயன்களைப் பற்றியும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் உரை விளக்கத்தைக் கருத்தூன்றிப் பயின்று அயரா அன்புடனும் ஆழ்ந்த திடநம்பிக்கையுடனும் இத்தோத்திரத்தை நாள் தோறும் ஓதி, எண்ணிய எண்ணியாங்கு எய்துவார்களாக.

*சென்னை-40*
*29-12-1993*
*(திருவாதிரை நன்னுள், மார்கழி)*

அன்பன்
**சபாரத்தினம்**
இயக்குநர்,
மெய்கண்டார் ஆகம நிறுவனம்

ओं गुरुः ओं

# ॥ श्री महागणपति पञ्चावरण स्तोत्रम् ॥

## ஶ்ரீ மஹாகணபதி பஞ்சாவரண ஸ்தோத்ரம்

श्री शिवः- (ஶ்ரீ சிவ:)

सृष्टिस्थित्यपहाराणां विश्वस्यास्यैककारणम् ।
महागणपतिं वन्दे पञ्चावरण संयुतम् ॥

ஸ்ருஷ்டிஸ்தித்யபஹாராணாம் விஸ்வஸ்யாஸ்யைக காரணம் ।
மஹாகணபதிம் வந்தே பஞ்சாவரண ஸம்யுதம் ॥ 1

क्रीडासक्त गणाधीश करशीकरपूरितं ।
ऐक्षवाम्भोनिधिं वन्दे तरङ्गकुलसंकुलम् ॥

க்ரீடாஸக்த கணாதீச கரசீகர பூரிதம் ।
ஐக்ஷவாம்போநிதிம் வந்தே பஞ்சாவரண ஸம்யுதம் ॥ 2

तन्मध्ये द्वीपवर्यं नौमि रत्नशिलातलं ।
सेवागतामराधीश दैत्यसिद्ध समाकुलम् ॥

தன்மத்யே த்வீபவர்யம் நௌமி ரத்ன சிலாதலம் ।
ஸேவாகதாமராதீச தைத்யஸித்த ஸமாகுலம் ॥ 3

पारिजातक-सन्तान मन्दार-हरिचन्दनान् ।
सकल्पवृक्षान् तत्रस्थान् संश्रयेऽष्ट फलप्रदान् ॥

பாரிஜாதக ஸந்தான மந்தார ஹரிசந்தனான் ।
ஸகல்பவ்ருக்ஷான் தத்ரஸ்தான் ஸம்ஸ்ரயேऽஷ்ட பலப்ரதான் ॥

तेषां ज्वलन् मरकत प्रवाल मणिवज्रतः ।
पलाश पल्लव फल प्रसूनस्य ऋतुव्रजैः ॥

தேஷாம் ஜ்வலன் மரகத ப்ரவாள மணிவஜ்ரத: ।
பலாச பல்லவ பல ப்ரஸூனஸ்ய ருதுவ்ரஜை: ॥ 5

युगपत्सेव्यमानस्य महतः कल्पशाखिनः ।
अधस्तात्कौमुदीबालातपाभ्यां संकुलस्थलम् ॥

யுகபத்ஸேவ்யமானஸ்ய மஹத: கல்பசாகின: ।
அதஸ்தாத் கௌமுதீபாலா தபாப்யாம் ஸங்குலஸ்தலம் ॥ 6

रत्नवेदिं यजेत्पूर्णकुम्भदीपोपशोभितां ।
लसद्वितान संयुक्तां चतुःस्तम्भ विराजिताम् ॥

ரத்னவேதிம் யஜேத் பூர்ண கும்பதீபோப சோபிதாம் ।
லஸத்விதான ஸம்யுக்தாம் சது: ஸ்தம்ப விராஜிதாம் ॥ 7

मुक्ताप्रवाल शोभाढ्यां नानारत्नैश्च शोभितां ।
तत्र धर्मादि सिंहास्य चतुष्पाद समन्वितम् ॥

முக்தாப்ரவாள சோபாட்யாம் நானாரத்னைஸ்ச சோபிதாம் ।
தத்ர தர்மாதி ஸிம்ஹாஸ்ய சதுஷ்பாத ஸமன்விதம் ॥ 8

पूजयामि विभोः पीठं अधर्माद्युपशोभितं ।
तन्मध्ये लिपिसंयुक्तं दलाष्टक मनोहरम् ॥

பூஜயாமி விபோ: பீடம் அதர்மாத்யுப சோபிதம் ।
தன்மத்யே லிபிஸம்யுக்தம் தளாஷ்டக மனோஹரம் ॥ 9

षट्कोणचक्रमध्यस्थं त्रिकोणान्तर कर्णिकम् ।
वृत्तभूवलयोपेतं विलसत्केसरान्वितम् ॥

ஷட்கோணசக்ர மத்யஸ்தம் த்ரிகோணாந்தர கர்ணிகம் ।
வ்ருத்தபூ வலயோபேதம் விலஸத் கேஸரான்விதம்॥ 10

सर्वशक्त्याख्यकमलं पूजयाम्यासनात्मकं ।
तीव्रा च ज्वालिनी नन्दा भोगदा कामरूपिणी ॥

ஸர்வசக்த்யாக்ய கமலம் பூஜயாம்யாஸனாத்மகம் ।
தீவ்ரா ச ஜ்வாலினீ நந்தா போகதா காமரூபிணீ ॥ 11

उग्रा तेजोवती सत्या नवमी विघ्ननाशिनी ।
किञ्जल्ककर्णिकासीना यास्ताः शोणाङ्गवाससाः ॥

உக்ரா தேஜோவதீ ஸத்யா நவமீ விக்னநாசினீ ।
கிஞ்ஜல்க கர்ணிகாஸீனா யாஸ்தா: சோணாங்க வாஸஸா:॥ 12

वन्दे वराभयकराः पीठशक्ती गणेशितुः ।
त्रिकोणकर्णिकायान्तु सुखासीनं सुरार्चितम् ॥

வந்தே வராபயகரா: பீடசக்தீ கணேசிது: ।
த்ரிகோண கர்ணிகாயாந்து ஸுகாஸீனம் ஸுரார்ச்சிதம்॥ 13

जपाकुसुमसंकाशं दीप्त्यारञ्जित दिङ्मुखं ।
गजाननं जगद्वन्द्यं तुन्दिलं चन्द्रशेखरम् ॥

ஜபாகுஸும ஸங்காசம் தீப்த்யா ரஞ்ஜித திங்முகம் ।
கஜானனம் ஜகத்வந்த்யம் துந்திலம் சந்த்ரசேகரம்॥ 14

एकदन्तं त्रिणयनं नागयज्ञोपवीतिनम् ।
रक्तमाल्याम्बरधरं रक्तगन्धानुलेपनम् ॥

ஏகதந்தம் த்ரிணயனம் நாகயக்ஞோபவீதினம் ।
ரக்த மால்யாம்பரதரம் ரக்த கந்தானுலேபனம் ॥ 15

फणामणिलसद्भोग भोगिभूषण भूषितं ।
वामनाङ्घ्रि करांभोजं दशदोर्दण्डमण्डितम् ॥

பணாமணி லஸத்போக போகிபூஷண பூஷிதம் ।
வாமனாங்க்ரி கராம்போஜம் தசதோர்தண்ட மண்டிதம் ॥ 16

दक्षवामकराग्रेषु बीजापूरं गदां धनुं ।
ऐक्षवं त्रिशिखं चक्रं कमलं पाशमुत्पलम् ॥

தக்ஷவாம கராக்ரேஷு பீஜாபூரம் கதாம் தனும் ।
ஐக்ஷவம் த்ரிசிகம் சக்ரம் கமலம் பாசமுத்பலம் ॥ 17

कलमाग्रं स्वरदनं पुष्करे कलशं शुभं ।
दधानं कलशस्थानि नानारत्नानि सर्वदा ॥

கலமாக்ரம் ஸ்வரதனம் புஷ்கரே கலசம் சுபம் ।
ததானம் கலசஸ்தானி நானாரத்னானி ஸர்வதா ॥

विकिरन्तं स्वभक्तेभ्यो विस्रवन्त्या च धारया ।
गण्डस्थल गलद्दानगन्धलुब्धान् मुहुर्मुहुः ॥

விகிரந்தம் ஸ்வபக்தேப்யோ விஸ்ரவந்த்யா ச தாரயா ।
கண்டஸ்தல களத்தான கந்தலுப்தான் முஹுர்முஹு: ॥

निर्वापयन्तं मधुपान् कर्णतालविघट्टनैः ।
महागणपतिं वन्दे वरदं शक्तिसंयुतम् ॥

நிர்வாபயந்தம் மதுபான் கர்ணதால விகட்டனை: ।
மஹாகணபதிம் வந்தே வரதம் சக்திஸம்யுதம் ॥

वामाङ्के गणनाथस्य सुखासीनां सुचिस्मितां ।
करेण पतिमालिङ्ग्य दक्षिणेनेतरेण च ॥

வாமாங்கே கணநாதஸ்ய ஸுகாஸீனம் ஸுசிஸ்மிதாம்।
கரேண பதிமாலிங்க்ய தக்ஷிணேநேதரேண ச॥ 21

बिभ्रतीं फुल्लकमलं कृपाविष्कृत वीक्षणां ।
दिव्यमाल्याम्बरालेपां दिव्याभरण भूषिताम् ॥

பிப்ரதீம் புல்லகமலம் க்ருபாவிஷ்க்ருத வீக்ஷணம் ।
திவ்யமால்யாம் பராலேபாம் திவ்யாபரண பூஷிதாம் ॥ 22

साधकाभीष्ट सर्वार्थ सिद्धिदानैक तत्परां ।
गौराङ्गीं गणनाथस्य शक्तिं भक्त्याऽभिवादये ॥

ஸாதகாபீஷ்ட ஸர்வார்த்த ஸித்திதானைக தத்பராம் ।
கௌராங்கீம் கணநாதஸ்ய சக்திம் பக்த்யா ऽபிவாதயே॥ 23

अग्रे बिल्वतरोर्मूले दिव्यसिंहासने स्थितौ ।
विद्युन्-नीलाम्बुद निभौ द्विचतुर्बाहुशालिनौ ॥

அக்ரே பில்வதரோர்மூலே திவ்ய ஸிம்ஹாஸனே ஸ்திதௌ।
வித்யுன் நீலாம்புத நிபௌ த்விசதுர்பாஹுசாலினௌ ॥ 24

पद्मद्वय गदाखड्ग शङ्खचक्रायुधान्वितौ ।
श्वेतपीताम्बरौ दिव्यमाल्यालेपन भूषितौ ॥

பத்மத்வய கதாகட்க சங்க சக்ராயுதான்விதௌ ।
ச்வேதபீதாம்பரௌ திவ்ய மால்யாலேபன பூஷிதௌ ॥ 25

रमारमेशौ संस्तौमि गणेशाभिमुखौ स्थितौ ।
गणेश दक्षिणे भागे वटवृक्षस्थले स्थितौ ॥

ரமாரமேசௌ ஸம்ஸ்தௌமி கணேசாபிமுகௌ ஸ்திதௌ ।
கணேச தக்ஷிணே பாகே வடவ்ருக்ஷஸ்தலே ஸ்திதௌ ॥ 26

त्र्यक्षौ सिंहासनासीनौ सुरासुरनिषेवितौ ।
हाटकस्फटिकप्रख्यौ पृथक् बाहुचतुष्टयौ ॥

த்ரயக்ஷௌ ஸிம்ஹாஸனாஸீனௌ ஸுராஸுர நிஷேவிதௌ ।
ஹாடக ஸ்படிக ப்ரக்யௌ ப்ருதக் பாஹுசதுஷ்டயௌ ॥ 27

पाशाङ्कुश वराभीति द्वयशूल परश्वधौ ।
दिव्यमाल्याम्बरालेप भूषिताविन्दु शेखरौ ॥

பாசாங்குச வராபீதி த்வயசூல பரச்வதௌ ।
திவ்யமால்யாம்பராலேப பூஷிதாவிந்து சேகரௌ ॥ 28

गणेशाभिमुखासीनौ नौम्युमावृषभध्वजौ ।
गणेशापरभागस्थौ बोधिवृक्षस्थले स्थितौ ॥

கணேசாபிமுகாஸீனௌ நௌம்யுமா வ்ருஷபத்வஜௌ ।
கணேசாபரபாகஸ்தௌ போதிவ்ருக்ஷஸ்தலே ஸ்திதௌ ॥ 29

दिव्यसिंहासनारूढौ हेमविद्रुम सन्निभौ ।
दिव्यमाल्याम्बरालेप भूषणौ द्वि-द्वि बाहुकौ ॥

திவ்ய ஸிம்ஹாஸனாரூடௌ ஹேமவித்ரும ஸந்நிபௌ ।
திவ்யமால்யாம்பராலேப பூஷணௌ த்வி-த்வி பாஹுகௌ ॥ 30

उत्पलद्वय पुण्ड्रेक्षु चापपुष्प शरान्वितौ ।
गणेशाभिमुखासीनौ प्रस्तौमि रथिमन्मथौ ॥

உத்பலத்வய புண்ட்ரேக்ஷு சாபபுஷ்ப சரான்விதௌ ।
கணேசாபிமுகாஸீனௌ ப்ரஸ்தௌமி ரதிமன்மதௌ ॥ 31

गणेश वामभागस्थौ प्रियङ्गु द्रुममूलगौ ।
नीलोत्पलद्युतिनिभौ दिव्यसिंहासनाश्रितौ ॥

கணேச வாமபாகஸ்தௌ ப்ரியங்கு த்ரும மூலகௌ ।
நீலோத்பல த்யுதிநிபௌ திவ்யஸிம்ஹாஸனாச்ரிதௌ ॥ 32

शुकव्रीह्यग्र चक्रोद्यत् - गदाभीति वरान्वितौ ।
श्वेतपीताम्बरौ दिव्य माल्यालेपन भूषितौ ॥

சுகவ்ரீஹ்யக்ர சக்ரோத்யத் கதாபீதி வரான்விதௌ ।
ச்வேத பீதாம்பரௌ திவ்ய மால்யா லேபன பூஷிதௌ ॥ 33

गणेशाभिमुखासीनौ द्विचतुर्बाहुशालिनौ ।
आधारभूतौ भूतानां भूवराहौ समाश्रये ॥

கணேசாபிமுகாஸீனௌ த்விசதுர்பாஹு சாலினௌ ।
ஆதாரபூதௌ பூதானாம் பூவராஹௌ ஸமாச்ரயே ॥ 34

षट्कोणस्थानगामोद प्रमोदोन्मुख दुर्मुखान् ।
अविघ्नं विघ्नकर्तारं गणेशाभिमुखस्थितान् ॥

ஷட்கோணஸ்தானகாமோத ப்ரமோதோன்முக துர்முகான் ।
அவிக்னம் விக்னகர்தாரம் கணேசாபிமுகஸ்திதான் ॥ 35

शोणाङ्गान् शुभ्रमाल्यांश्च त्रिणेत्रान् भोगिभूषणान् ।
पाशाङ्कुश वराभीति हस्तान् अर्धेन्दुशेखरान् ॥

சோணாங்கான் சுப்ரமால்யாம்ஸ்ச த்ரிணேத்ரான் போகிபூஷணான் ।
பாசாங்குச வராபீதி ஹஸ்தான் அர்தேந்து சேகரான் ॥ 36

ऋद्ध्यादि शक्तिसहितान् गजवक्त्रान् समाश्रये ।
ऋद्धिश्चैव समृद्धिश्च कान्तिश्च मदनावती ॥

ருத்த்யாதி சக்திஸஹிதான் கஜவக்த்ரான் ஸமாச்ரயே ।
ருத்திஸ்ச ஸம்ருத்திஸ்ச காந்திஸ்ச மதனாவதீ ॥ 37

मदद्रवा द्राविणी च षडामोदादि शक्तयः ।
यास्ताश्चामीकरनिभाः पुल्लकल्हार धारिणीः ॥

மதத்ரவா த்ராவிணீ ச ஷடாமோதாதி ஶக்தய: ।
யாஸ்தாஸ்சாமீகர நிபா: புல்லகல்ஹார தாரிணீ: ॥ 38

दिव्याभरणमाल्यानुलेपनाशुक भूषणाः ।
स्वात्मेशाङ्कस्थिताः सौम्या ऋद्ध्यादीः शरणं भजे ॥

திவ்யாபரண மால்யானு லேபனாம்சுக பூஷணா: ।
ஸ்வாத்மேசாங்கஸ்திதா: ஸௌம்யா ருத்த்யாதீ: சரணம் பஜே ॥

गणेशोभयपार्श्वस्थौ मुक्तामाणिक्य सन्निभौ ।
सदा धनानि वर्षन्तौ स्वशक्तिभ्यां समन्वितौ ॥

கணேசோபய பார்ச்வஸ்தௌ முக்தாமாணிக்ய ஸந்நிபௌ।
ஸதா தனானி வர்ஷந்தௌ ஸ்வசக்திப்யாம் ஸமன்விதௌ ॥ 40

वसुधारा वसुमती संश्रये शङ्ख-पद्मकौ ।
वह्नीशरक्षौ वाय्वग्र पृष्टेष्वङ्गानि षड्विभोः ॥

வஸுதாரா வஸுமதீ ஸம்ச்ரயே சங்க பத்மகௌ ।
வஹ்னீச ரக்ஷோ வாய்வக்ர ப்ருஷ்டேஷ்வங்காணீ ஷட்விபோ:

हृदादीनि प्रसन्नानि नानावर्णाकृतीनि च ।
गणेशाभिमुखस्थानि नतिमुद्राणि संश्रये ॥

ஹ்ருதாதீனி ப்ரஸன்னானி நானாவர்ணாக்ருதீனி ச ।
கணேசாபிமுகஸ்தானி நதிமுத்ராணி ஸம்ச்ரயே ॥ 42

दिव्यमाल्याम्शुकालेपाः पृथक् वर्णाननाकृतीः ।
स्व हेति वाहनोपेताः नौमि ब्राह्मयादि मातृकाः ॥

திவ்யமால்யாம்சுகாலேபா: ப்ருதக் வர்ணானாக்ருதீ: ।
ஸ்வ ஹேதி வாஹனோபேதா: நௌமி ப்ராஹ்ம்யாதி மாத்ருகா: ॥

प्राकादि दिक्-पतीन् स्व-स्व हेति वाहन संयुतान्।
नानावर्णाकृतीन् सौम्यान् इन्द्रादीन् शरणं भजे ॥

ப்ராகாதி திக்-பதீன் ஸ்வ ஸ்வ ஹேதி வாஹன ஸம்யுதான்।
நானாவர்ணாக்ருதீன் ஸௌம்யான் இந்த்ராதீன் சரணம் பஜே ॥ 44

चतुश्चत्वारिंशत् परिगणित पद्यैर्विरचितम्
गणेशस्तोत्रं यः पठति नियतात्मा स लभते ।
धनं धान्यं पुत्रान् जननृपवशित्वं पशुचयं
चिरादायुर्विद्यां विमलतर कीर्तिं शिवपदम् ॥

சதுஸ்சத்வாரிம்சத் பரிகணித பத்யைர் விரசிதம்
கணேச ஸ்தோத்ரம் ய: படதி நியதாத்மா ஸ லபதே।
தனம் தான்யம் புத்ரான் ஜனந்ருப வசித்வம் பசுசயம்
சிராத் ஆயுர்வித்யாம் விமலதர கீர்த்திம் சிவபதம்॥ 45

चतुश्चत्वारिंशत् परिगणितमेतत् प्रतिदिनं
पठेत्-अष्टद्रव्यैः गणपति समाराधनपरः ।
चतुश्चत्वारिंशत्-दिवसमिति मत्वा स लभते
समृद्धान् इष्टार्थानपि जपदिनेष्वेव लभते ॥

சதுஸ்சத்வாரிம்சத் பரிகணிதமேதத் ப்ரதிதினம்
படேத் அஷ்டத்ரவ்யை: கணபதி ஸமாராதனபர: ।
சதுஸ்சத்வாரிம்சத் திவஸமிதி மத்வா ஸ லபதே
ஸம்ருத்தான் இஷ்டார்த்தானபி ஜபதினேஷ்வேவ லபதே॥ 46

नालिकेर कदलीफल लाजान् मोदकान् पृथुक सक्तु तिलेक्षून्।
सन्निवेद्य परितर्प्य गणेशं कीर्तयेत्-स्तवं इमं पुमर्थम्॥

நாளிகேர கதலீபல லாஜான் மோதகான் ப்ருதுக ஸக்து திலேக்ஷூன் ।
ஸந்நிவேத்ய பரிதர்ப்ய கணேசம் கீர்த்தயேத் ஸ்தவம் இமம் புமர்த்தம்॥

यदक्षरपदभ्रष्टं मात्राहीनन्तु यद्भवेत् ।
तत्सर्वं वल्लभायुक्तो गणेशः क्षन्तुमर्हसि ॥

யதக்ஷர பதப்ரஷ்டம் மாத்ராஹீனந்து யத்பவேத் ।
தத்ஸர்வம் வல்லபாயுக்தோ கணேச: க்ஷந்தும் அர்ஹஸி॥

॥ श्रीः ॥

(इति श्री महाशैव तन्त्रे, श्री शिवप्रोक्तं,
श्री महागणपति पञ्चावरण स्तोत्रं समाप्तम्)

॥ श्री गणेश गायत्री ॥

ओं एकदन्ताय विद्महे वक्रतुण्डाय धीमहि
तन्नो दन्तिः प्रचोदयात् ॥

ஸ்ரீ கணேச காயத்ரி

ஓம் ஏகதந்தாய வித்மஹே வக்ரதுண்டாய தீமஹி ।
தன்னோ தந்தி: ப்ரசோதயாத் ॥

உ

# ஸ்ரீ மஹா கணபதி பஞ்சாவரண ஸ்தோத்ரம்

## தமிழ் விளக்கம்

**சிவபெருமான் :-**

1

படைத்தல், காத்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களைச் செய்பவர்; அனைத்து உலகங்களின் தோற்றத்திற்கும் மூலகாரணமாக இருப்பவர்; ஐந்து ஆவரணங்களோடு கூடியிருப்பவர். இத்தகைய மஹா கணபதிப் பெருமானை வணங்குகிறேன்.

2

வேடிக்கை விளையாட்டில் விருப்பம் கொண்ட கணபதிப் பெருமானின் தும்பிக்கையால் தூவப்பட்ட துளிகளால் நிறைந்திருப்பதும் அலைகளின் ஆரவார முழக்கங்கள் நிரம்பப் பெற்றிருப்பதும் ஆன கருப்பஞ்சாற்றுக் கடலை வணங்குகிறேன்.

3

அந்தக் கருப்பஞ்சாற்றுக் கடலின் நடுவே சிந்தாமணித் தீவு (த்வீபம்) மிகச் சிறந்து விளங்குகிறது. கணபதிப் பெருமானைச் சேவிப்பதற்காக வந்திருக்கும் தேவர்கள், அவர்களின் தலைவன் இந்திரன், தைத்தியர்

கள் (அசுரர்கள்) ஸித்தர்கள் (தேவகணங்களில் ஒருவகை யினர்) - இவர்களால் சூழப்பட்டதாக அத்தீவு மிகவும் கோலாகலமாகத் திகழ்கிறது. இதனையும் இங்கே உள்ள ரத்தினமயமான கற்படுகையையும் வணங்குகிறேன்.

4

அங்கே பாரிஜாதகம், சந்தானம், மந்தாரம், ஹரிசந்த னம், கற்பகம் என்னும் ஐவகைத் தெய்வ விருக்ஷங்கள் சிறப்பாகத் திகழ்கின்றன. எண்வகைப்பட்ட ஐசுவரியங் களாகிய பயன்களை அளிப்பவை அவை. அந்தத் தெய்வ விருக்ஷங்களைச் சரணமாக அடைகிறேன்.

5-8 அ

அந்தத் தருக்களில் விளங்கும் இலைகள், தளிர்கள், கனிகள், பூக்கள் இவையெல்லாம் முறையே மரகதமய மாகவும், பவளமயமாகவும், மாணிக்க மயமாகவும் வஜ்ரமயமாகவும் பிரகாசிப்பவை. வெவ்வேறு ருதுக்க ளில் (பருவங்களில்) பூக்கும் பூக்கள் யாவும் அங்கே ஒரே சமயத்தில் பூத்துள்ளன. இத்தகைய பெருமையும் தெய்விகத் தன்மையும் பெற்றிருக்கும் கற்பக விருக்ஷக் கிளைகளின் கீழே உள்ள இடப்பரப்பு முழுவதும் நில வொளியாலும் இளஞ்சூரியனின் ஒளியாலும் வியாபிக் கப்பட்டுள்ளது. அங்கே ரத்தினமயமான வேதிகை ஒன்று உள்ளது. அது பூர்ணகும்பம், தீபம் முதலான அஷ்டமங்கலப் பொருள்களால் பொலிவு பெற்றுள்ளது. அந்த வேதிகை, பிரகாசிக்கும் விதானத்தோடு விளங்கு வது; நான்கு தூண்களுடன் விளங்குவது; முத்துக்களா லும் பவழங்களாலும் மிகவும் பொலிவு பெற்றிருப்பது;

மற்றும் பல்வகைப்பட்ட ரத்தினங்களாலும் பிரகாசமும் மிளிர்ச்சியும் பெற்றிருப்பது. இத்தகைய வேதிகையை வழிபடுகிறேன்.

8 ஆ - 9 அ

எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும் கணபதிப் பெருமானுக்குரிய பீடம் வேதிகையின் மேல் உள்ளது. அந்தப் பீடம், சிம்மவடிவம் கொண்டு விளங்குவது. அது தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் எனும் நான்கு பாதங்களையும் மேலே அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் எனும் நான்கு பலகை களையும் உடையதாக விளங்குகிறது. இத்தகைய பீடத் தையும் பூஜிக்கிறேன்.

9ஆ - 11 அ

அந்தப் பீடத்தின் நடுவே பத்மாஸனம் திகழ்கிறது. தாமரையின் எட்டு இதழ்களும் மனோகரமானவை. எட்டு இதழ்களிலும் க முதல் க்ஷ வரை உள்ள 35 எழுத்துக்களும் வியாபித்துள்ளன. கர்ணிகையில் உள்ள எட்டுக் கேஸரங்களிலும் அ முதல் அ: வரை 16 உயிர் எழுத்துக்களும் வியாபித்துள்ளன. எட்டு இதழ்களின் உட்புறம் அறுகோண மண்டலம்; இதனுள் முக்கோண வடிவான கர்ணிகை. எட்டு தளங்களைச் சூழ்ந்து ஒரு வட்டம். வட்டத்தை உள்ளடக்கிய பூபுர ரேகைகள் மூன்று. இத்தகைய அமைப்புடன் திகழ்வதும், கேஸரங் களோடு கூடியதும் எல்லாச் சக்திகளின் மயமாக இருப்ப துமான அந்தப் பத்மாஸனத்தைப் பூஜிக்கிறேன்.

*11 ஆ - 13 அ*

கணபதிப் பெருமானின் தாமரைப் பீடத்திற்கு உரிய சக்திகள் ஒன்பதின்மர். அவர்கள் தீவ்ரா, ஜ்வாலினீ, நந்தா, போகதா, காமரூபிணீ, உக்ரா, தேஜோவதீ, ஸத்யா, விக்னநாசினீ என்பவர்கள். செந்நிறமான அங்கங்களை உடையவர்களாகவும், செந்நிறச் சேலை அணிந்திருப்பவர்களாகவும், கேஸர பாகத்தில் வீற்றிருப்பவர்களாகவும் வரத முத்திரை, அபய முத்திரை திகழும் திருக்கரங்களை உடையவர்களாகவும் பீடசக்திகள் விளங்குகின்றனர். இவர்களை வணங்குகிறேன்.

*13ஆ - 20*

முக்கோணத்துக் கர்ணிகையின் நடுவில் ஸிம்ஹாசனத்தில் அமர்ந்திருப்பவர் மஹாகணபதிப் பெருமான். தேவர்கள் அனைவராலும் வழிபடப்படும் அவர் செம்பருத்திப் பூப்போன்று சிவந்த வண்ணத்துடன் திகழ்பவர்; தனது திருமேனி ஒளியால் திசைகள் அனைத்தையும் பிரகாசப்படுத்தி அழகுசெய்பவர்; யானை முகத்தினர்; அனைத்துலகங்களாலும் வழிபடப்படுபவர்; பெருத்த வயிறு உடையவர்; இளம்பிறை திகழும் திருமுடி உடையவர். ஒற்றைக் கொம்பினர்; மூன்று கண்கள் உடையவர்; நாகத்தைப் பூணூலாக அணிந்திருப்பவர்; செந்நிற ஆடையாலும் செந்நிற மாலையாலும் அலங்கரிக்கப் பெற்றிருப்பவர்; கடிஸூத்ரம் (அரைஞாண்), கடகம், அங்கதம், உதரபந்தம் முதலான ஆபரணங்களாக நாகங்களையே அணிந்திருப்பவர்; குறுகிய திருப்பாதங்களை உடையவர்; தாமரை போன்ற திருக்கரங்களை உடையவர்; பத்துத் திருப்புயங்களுடன் அழகாக விளங்

குபவர். வலம் இருந்து இடப்பாகம் முடியத் தமது பத்துத் திருக்கரங்களிலும் மாதுளங்கனி, கதை, கரும்பு வில், சூலம், சக்கிரம், தாமரை, பாசம், நீலோத்பலம், செந்நெல் கதிர், தனது முறிந்திருக்கும் தந்தம்- என்னும் இவைகளைத் தாங்கி இருப்பவர். தமது தும்பிக்கையின் நுனியில் உள்ள ஸௌபாக்யமயமான கலசத்திலிருந்து நாளுவிதமான ரத்தினங்களையும் எப்பொழுதும் இடைவி டாத தாரை போன்று தன் பக்தர்களுக்கு வாரி இறைப்ப வர். கன்னத்திலிருந்து வெளிப்படும் மதப்பெருக்கின் மணத்தால் ஈர்க்கப்பட்டு அடிக்கடி மொய்க்கும் வண்டுக் கூட்டங்களைத் தமது காதுகளின் அசைவால் விலக்குப வர்; வரங்களை அளிப்பவர்; வல்லபை என்னும் அம்பி கையுடன் திகழ்பவர். இத்தகைய மஹாகணபதிப் பெரு மானை வணங்குகிறேன்.

## 21-23

வல்லபா அம்பிகை மஹாகணபதிப் பெருமானின் இடதுமடியில் வீற்றிருப்பவள்; அழகிய புன்முறுவலு டன் பொலிபவள். தனது வலக்கையால் கணபதிப் பெருமானை அணைத்துக் கொண்டு, இடக்கையில் நன்கு மலர்ந்துள்ள தாமரைப் பூவை ஏந்திக் கொண்டு விளங்கு பவள்; கிருபையை எப்பொழுதும் வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் கண்பார்வை உடையவள்; திவ்விய ஆடை, திவ்விய பரிமளப் பூச்சு, திவ்விய ஆபரணங்கள் - இவற்றால் அலங்கரிக்கப் பெற்ற திருமேனி உடைய வள்; வழிபடும் அடியார்கள் கோரிய அனைத்துப் பொருள்களையும் சித்திகளையும் உடனுக்குடன் வழங்குவ தில் ஒரே நோக்கமாக இருப்பவள். மஹாகணபதிப்

பெருமானின் சக்தியும் மேற்கூறப்பட்ட பெருமைகளை உடையவளுமான வல்லபா தேவியைப் பக்தியால் வணங்குகிறேன்.

*(24 முதல் 34 வரை முதலாம் ஆவரண பூஜை)*

*24 — 26 அ*

*(அறுகோணத்திற்கு உட்புறம், முக்கோணத்திற்கு வெளியே)*

மஹாகணபதிப் பெருமானுக்கு முன்புறம் (கிழக்கில்) வில்வ மரம் உள்ளது. அதன் அடியில் மஹாலக்ஷ்மியும் விஷ்ணுவும் சிம்மாஸனத்தில் வீற்றிருக்கின்றனர். மின்னல் போன்ற நிறம், தாமரைப்பூ ஏந்திய இரண்டு திருக்கரங்கள், திவ்விய ஆபரணங்கள் - இத்தகைய லக்ஷணங்களுடன் திகழ்பவள் திருமகள். நீலமேக நிறம், நான்கு திருக்கரங்கள், அவற்றில் கதை, வாள், சங்கு, சக்கிரம் எனப்படும் ஆயுதங்கள், பீதாம்பர ஆடை, திவ்விய மாலைகள், திவ்விய பரிமளப் பூச்சு, திவ்ய ஆபரணம் - இத்தகைய லக்ஷணங்களுடன் திகழ்பவர் விஷ்ணு. வல்லபையுடன் கூடிய மஹாகணபதியை நோக்கிய வண்ணம் பில்வமரத்தடியில் ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் இவ்விருவரையும் நன்கு துதிக்கிறேன்.

*26 ஆ — 29 அ*

மஹாகணபதிப் பெருமானுக்கு வலதுபாகத்தில் (அதாவது தெற்குத் திசையில்) கல்லால மரத்தின் கீழே உமையும் சிவனும் ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கின்றனர். தேவர்களாலும் அஸுரர்களாலும் வணங்கப்படும்

இவர்களுள், உமை அம்பிகை ஆடகப்பொன் நிறத்துடனும் மூன்று கண்களுடனும் திகழ்பவள். பாசம், அங்குசம், வரதமுத்ரை, அபய முத்ரை தாங்கிய நான்கு திருக்கரங்களை உடையவள். ரிஷபக் கொடியுடைய சிவன் படிகம் போன்ற நிறத்துடனும், மூன்று கண்களுடனும், சூலம், பரசு, வரத முத்ரை, அபயமுத்ரை தாங்கிய நான்கு திருக்கரங்களுடனும் திகழ்பவர். திவ்விய மாலைகளாலும் திவ்விய ஆடைகளாலும் திவ்விய பரிமளப் பூச்சாலும், திவ்விய ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டவர்களாகவும், இளம்பிறை திகழும் திருமுடி உடைவர்களாகவும் விளங்கிக் கணபதிப் பெருமானையும் வல்லபையையும் நோக்கியவாறு கல்லாலின் கீழே சிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் இவ்விருவரையும் வணங்குகிறேன்.

29 ஆ — 31

மஹாகணபதிப் பெருமானுக்குப் பின்புறம் (மேற்குத் திசையில்) அரசமரத்தின் கீழே திவ்யமான ஸிம்மாஸனத்தில் ரதியும் மன்மதனும் வீற்றிருக்கின்றனர். பொன்னிறம், நீலோத்பல மலர்களை ஏந்தியுள்ள இரண்டு திருக்கரங்கள், திவ்விய மாலை, திவ்விய ஆடை, திவ்விய பரிமளப் பூச்சு, திவ்ய ஆபரணங்கள்-இத்தகைய லக்ஷணங்களுடன் திகழ்பவள் ரதி தேவி. பவள நிறம், கரும்புவில், மலரம்புகள் இவற்றைத் தாங்கியுள்ள இரண்டு திருக்கரங்கள், திவ்விய மாலை, திவ்விய ஆடை,

திவ்விய பரிமளப்பூச்சு, திவ்விய ஆபரணங்கள் இத்தகைய லக்ஷணங்களுடன் விளங்குபவன் மன்மதன். கணபதிப் பெருமானையும் வல்லபையையும் நோக்கிய வண்ணம் போதி (அரச) மரத்தின் கீழே சிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் இவர்கள் நன்கு போற்றுகிறேன்.

*31 — 34*

மஹாகணபதிப் பெருமானுக்கு இடதுபுறம் (வடக்குத்திசையில்) ஞாழல் (குங்கும) மரத்தின் கீழே திவ்விய சிம்மாஸனத்தில் பூதேவியும் யக்ஞவராஹ மூர்த்தியும் வீற்றிருக்கின்றனர். இருவருமே நீலோத்பலம் போன்ற நிறம் உடையவர்கள். கிளி, செந்நெற்கதிர் - இவற்றை ஏந்திய இரண்டு திருக்கரங்களை உடையவளாகவும், வெண்ணிறச் சேலை, திவ்விய மாலை, பரிமளப்பூச்சு, ஆபரணங்கள் இவைகளால் அலங்கரிக்கப் பெற்றவளாகவும் திகழ்பவள் பூதேவி. சக்ரம், கதை, வரதமுத்ரை, அபய முத்ரை — இவற்றை ஏந்திய நான்கு திருக்கரங்கள் உடையவராகவும், பீதாம்பர ஆடை, திவ்விய மாலை, பரிமளப்பூச்சு, ஆபரணங்கள் இவைகளால் அலங்கரிக்கப் பெற்றவராகவும் விளங்குபவர் யக்ஞவராஹமூர்த்தி. கணபதிப் பெருமானையும் வல்லபையையும் நோக்கிய வண்ணம் சிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் இவ்விருவரையும் சரண் அடைகிறேன்.

*(35 முதல் 39 வரை இரண்டாம் ஆவரண பூஜை)*
*(அறுகோணத்தில்)*

*35 — 37 அ*

இரண்டாவது ஆவரணமாகிய அறுகோணத்தில் (கணபதிப் பெருமானுக்கு நேர் எதிர் உள்ள கோணத்திலிருந்து வலமாக ஆறுகோணங்களிலும்) இருப்பவர்கள் ஆறு கணேச மூர்த்திகள். அவர்கள் ஆமோத கணபதி ப்ரமோத கணபதி, ஸுமுக கணபதி, துர்முக கணபதி, அவிக்ன கணபதி, விக்னகர்த்ரு கணபதி என்பவர்கள். கணபதிப் பெருமானையும் வல்லபையையும் நோக்கிய வண்ணம் இருக்கும் இவர்கள் செந்நிறமான அங்கங்களை உடையவர்கள்; மணமும் ஒளியும் மிகுந்த மாலை அணிந்திருப்பவர்கள்; மூன்றுகண்கள் உடையவர்கள்; நாகாபரணங்களை அணிந்திருப்பவர்கள். ஒவ்வொருவரும் பாசம், அங்குசம், வரத முத்ரை, அபய முத்ரை தாங்கிய நான்கு திருக்கரங்கள் உடையவராகவும் பிறைச் சந்திரனைச் சூடியவராகவும் விளங்குபவர். ருத்தி முதலான தத்தம் சக்திகளோடு யானைமுகத்தினராய் விளங்கும் இவர்களைச் சரண் அடைகிறேன்.

*37 ஆ — 39*

ஆமோதர் முதலான கணேச மூர்த்திகளின் சக்திகள் ருத்தி, ஸம்ருத்தி, காந்தி, மதனாவதி, மதத்ரவா, த்ராவிணீ எனப்படும் அறுவராவர். சாமீகரம் எனப்படும் சிறந்த

வகைப் பொன்னின் நிறத்தை உடைய இவர்கள் நன்கு மலர்ந்துள்ள செங்கழுநீர்ப் பூவைத் திருக்கரத்தில் ஏந்தியுள்ளவர்களாவர். திவ்வியமயமான ஆபரணங்கள், மாலைகள், பரிமளப் பூச்சுகள், ஆடைகள்- இவைகளால் அலங்கரிக்கப் பெற்றவர்களாகவும் தத்தம் பிரபுவாகிய கணேச மூர்த்தியின் மடியில் வீற்றிருப்பவர்களாகவும் ஆனந்தம் நிறைந்தவர்களாகவும் திகழும் ருத்தி முதலான கணேச சக்திகளைச் சரணம் அடைகிறேன்.

40 - 41 அ
(சங்கநிதி, பத்மநிதி)

மஹா கணபதிப் பெருமானின் வலப் பக்கத்தில் (வட்டக் கோட்டிற்கும், இரண்டு கோணங்களுக்கும் இடையே) இருப்பதும் முத்தினைப் போன்ற நிறம் உடையதும், எப்பொதும் தனங்களைப் பொழிந்து கொண்டிருப்பதும், வஸுதாரா எனப்படும் தன் தேவியுடன் (சக்தியுடன்) விளங்குவதுமான சங்க நிதியைச் சரண் அடைகிறேன். அவ்வாறே மஹாகணபதிப் பெருமானின் இடப்பக்கத்தில் (வட்டக் கோட்டிற்கும் இரண்டு கோணங்களுக்கும் இடையே) இருப்பதும் மாணிக்கம் போன்ற நிறம் உடையதும், எப்பொழுதும் தனங்களை வர்ஷித்துக் கொண்டிருப்பதும், வஸுமதீ எனப்படும் தன் சக்தியுடன் விளங்குவதுமான பத்மநிதியைச் சரண் அடைகிறேன்.

## *41 ஆ — 42*
## *(மூன்றும் ஆவரண பூஜை)*
## *(ஹ்ருதயம் முதலான அங்க தேவதைகள்)*

பெருமானின் ஆறு அங்கமந்திர தேவதைகளாகவும், பெருமானின் தென் கிழக்கு, வட கிழக்கு, தென் மேற்கு, வட மேற்கு, பெருமானின் முன்புறம், பின் புறம் என்ற ஸ்தானங்களில் சாந்த ரூபமாகவும், நானுவித மான வண்ணங்கள் உடையவர்களாகவும், நமஸ்கார முத்ரை தாங்கியவர்களாகவும் பெருமானையும் வல்லபை யையும் நோக்கிய வண்ணம் நிலைபெற்றிருக்கும் ஹ்ருத யம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் - எனப்படும் ஆறு தேவதைகளையும் சரண் அடைகிறேன்.

## *43*
## *(நான்காவது ஆவரண பூஜை-*
## *பிராஹ்மி முதலான சக்திகள்)*
## *(எண் தளங்களில்)*

திவ்வியமான மாலை, ஆடை, பரிமளப்பூச்சுகளால் அலங்கரிக்கப் பெற்றவர்களாகவும், தத்தமக்கு உரிய வண்ணத்துடனும் ரூபத்துடனும் திகழ்பவர்களாகவும், தத்தமக்கு உரிய ஆயுதம், வாகனம் இவைகளை உடைய வர்களாகவும் விளங்கும் பிராஹ்மி, மாஹேசுவரி, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ எனப்படும் மாத்ருகா சக்திகளை வணங்குகிறேன்.

44

(ஐந்தாவது ஆவரண பூஜை - இந்திரன் முதலான திக்பாலகர்கள்)

கிழக்கு முதல் வடகிழக்கு ஈருக உள்ள எண் திசைகளுக்குத் தலைவர்களாகவும், தத்தமக்கு உரிய ஆயுதம், வாகனம் இவைகளை உடையவர்களாகவும், தத்தமக்கு உரிய வெவ்வேறுபட்ட வண்ணம், வடிவம் இவைகளை உடையவர்களாகவும், சாந்த குணம் உடையவர்ளாகவும் விளங்கும் இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனப்படும் இவர்களைச் சரணம் அடைகிறேன்.

45 — 46

பல சுருதி

(ஸ்தோத்ர பாராயண பலன்) 45

நாற்பத்து நான்கு எனக் கணக்கிடப்பட்ட சுலோகங்களால் செய்யப்பட்டுள்ள இந்த கணேச ஸ்தோத்திரத்தை யார் ஒருவர், நியமமான அனுஷ்டானங்களுடன் படிக்கின்ருரோ அவர் தனப்பேறு, தான்யவளம், நன்மக்கட்பேறு, மக்களையும் அரசனையும் தன்பால் வசீகரிக்கும் ஆன்மபலம், பசுமுதலான மிருகவளம், நீண்ட ஆயுள், கல்விச் செல்வம், குற்றமற்ற பெரும்புகழ் இவற்றை இம்மையிலேயே பெற்று இறுதியில் சிவப் பெருநிலையையும் அடைவார்.

46

நாற்பத்து நான்கு சுலோகங்களால் கணக்கிட்டுச் செய்யப்பட்டுள்ள இந்தத் தோத்திரத்தை, கணபதிப் பெருமானை வழிபடுவதில் சிரத்தையும் ஆர்வமும் கொண்ட பக்தன் தினந்தோறும் எண்வகைப் பொருள்களால் பூஜிப்பவனாக இருந்துகொண்டு படிக்க வேண்டும். ''இவ்வாறு நாற்பத்து நான்கு நாள்கள் செய்வேனாக'' என ஸங்கல்பித்துக் கொண்டு இதனைப் படிப்பவர், ஜபத்தைத் தொடங்கிய அதே நாளிலேயே தான் விரும்பிய பேறுகள் அனைத்தையும் நிறைந்த வளத்தையும் பெறுவார்.

47

(எண்வகைப் பொருள்கள்)

இளநீர், வாழைப்பழம், நெற்பொறி, மோதகம் (கொழுக்கட்டை), அவல், மா(வு), எள், கரும்பு - இந்த எட்டுப் பொருள்களையும் மஹாகணபதிப் பெருமானுக்கு நிவேதனம் செய்து திருப்தி செய்த பின்னர்ப் புருஷார்த்தம் ஸித்திப்பதற்காக இந்தத் தோத்திரத்தைப் பாராயணம் செய்ய வேண்டும்.

48

பிழை பொறுக்க முறையீடு

வல்லபா தேவியுடன் வளங்கும் மஹாகணபதிப் பெருமானே! இந்தத் தோத்திரத்தைப் பாராயணம் செய்யும் பொழுது அறிந்தோ அறியாமலோ ஏற்பட்டுவிட்ட மாத்திரைக் குறை, எழுத்துக்குறை, சொற் குறை என்ற வகையில் எது எது உண்டாகியதோ, அந்தந்தக் குறையைத் தாங்கள் கருணை கூர்ந்து பொறுத்தருள வேண்டும்.

(ஸ்ரீ மஹா சைவ தந்த்ரம் என்னும் பெருநூலில்
சிவபெருமானால் வெளிப்படுத்தப்பட்ட
ஸ்ரீ மஹாகணபதி
பஞ்சாவர்ண ஸ்தோத்ரம்)

உ

# யந்திர வழிபாடு

தெய்வத்தை ஒரு குறிப்பிட்ட பிம்பத்தில் (சிலைவடிவில்) ஆவாஹனம், பிரதிஷ்டை முதலான கிரியைகளைச் செய்து முறையாக வழிபடுதலைப் போன்றே ஒரு குறிப்பிட்ட யந்திர வடிவத்திலும் வழிபடலாம். யந்த்ரம் என்பதற்கு ''முறையாக மந்திர ரூபத்தால் கூட்டி நிலைநிறுத்தப்பட்டது'' என்று பொருள். பிம்பத்தின் மாற்று வடிவமே யந்திரம். இதில் எழுதப்பட்டுள்ள கோடுகளும் எழுத்துக்களும் இதற்குரிய தெய்வத்தின் அங்கங்களாகவும் ஜீவநாடிகளாகவும் விளங்குகின்றன. ஒரு தெய்வத்திற்குரிய மூலமந்திரமே உண்மையில் யந்திர வடிவம் பெறுகிறது. மூலமந்திரத்திற்கும், யந்திரத்திற்கும், அதன் அதி தேவதைக்கும், உபதேசித்த குருவுக்கும், வழிபாடு செய்யும் தனக்கும் இடையே எவ்விதமான பேதநிலையையும் காணுமல் ஐக்கிய பாவனை செய்து யந்திர வழிபாட்டையும் தோத்திர பாராயணத்தையும் செய்ய வேண்டும்.

யந்திரத்தைச் செப்புத்தகட்டிலோ பொன்தகட்டிலோ தான் எழுதி வழிபடவேண்டும் என்ற அவசியம் இல்லை. யந்திரத்தை மனத்தால் பாவித்து வழிபடுவதே உத்தமம். வெளிமுக வழிபாடு நம்மை வெளியிலேயேதான் நிறுத்தும். உண்முக வழிபாடுதான் உறுதி நிலையையும் ஐக்கிய நிலையையும் கூட்டி அனைத்து விதமான பேறுகளையும் கொடுக்கும்.

யந்திரம் என்பதைச் சக்கிரம் என்றும் கூறுவதுண்டு. இங்கே சக்கிரம் என்பதற்குக் கூட்டம் என்று பொருள்.

ஒரு மூலதெய்வமும் அதற்குரிய பரிவார கணங்களும் கூட்டமாக யந்திரத்தில் அந்த அந்தத் தானத்தில் நிலை பெற்றிருப்பதால் சக்ரம் என்ற பெயர் ஏற்பட்டது. ஒரு தெய்வத்தின் பிம்பம் எந்தத் தத்துவத்தின் அடிப்படையில் அமைந்திருக்கிறதோ அந்தத் தத்துவத்தின் அடிப்படையில்தான் யந்திரம் அமைந்திருக்கும்.

''யமபூதாதி ஸர்வேப்யோ பயேப்யோऽபி குலேச்வரி।
த்ராயதே ஸததம் சைவ தஸ்மாத் யந்த்ரம் இதீரிதம்॥''

என்று குலார்ணவ தந்த்ரம் என்னும் ஆகமம் கூறுகிறது. *(17:61)* ''யமபயம், பஞ்சபூதங்களாலும் பிணி முதலிய ஏனையவற்றாலும் ஏற்படும் பயங்கள் ஆகிய இவற்றிலிருந்து அடியார்களை எப்பொழுதும் காப்பாற்றுவதால் யந்திரம் எனக் கூறப்படுகிறது'' என்பது இந்த ஆகமப் பாட்டின் பொருள்.

தகுந்த குரு மூலமாக வழிபாட்டு முறைகளைத் தெரிந்து கொண்ட பிறகுதான் யந்திர வழிபாட்டை ஒருவர் மேற்கொள்ளலாம்.

ஆனால் யந்திரவழிபாட்டு நுட்பங்களை வெளியிடுகின்ற முறையில் அமைந்துள்ள ஸ்ரீ மஹாகணபதி பஞ்சாவரண ஸ்தோத்ரம் முதலான தோத்திர நூல்களை எல்லோருமே பாராயணம் செய்யலாம். தனியே உபதேசம் தேவை இல்லை எனினும் தனக்கு என்று உள்ள குருவையோ, ''ஸர்வேஷாம் ஆதிம குரு'' வான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திப் பெருமானையோ வழிபட்டுப் பிறகு இந்தத் தோத்திர பாராயணத்தை மேற்கொள்ளலாம்.

## ஸ்ரீ கணபதிப் பெருமானின் அஷ்ட மூர்த்தி நாமாவளி

१. ओं क्ष्मामूर्त्यधिपतये हस्तिवक्त्राय नमः

ஓம் க்ஷ்மா மூர்த்யதிபதயே ஹஸ்திவக்த்ராய நம: (பூமி)

२. ओं जलमूर्त्यधिपतये विनायकाय नमः

ஓம் ஜலமூர்த்யதிபதயே விநாயகாய நம: (நீர்)

३. ओं वह्निमूर्त्यधिपतये प्रलम्बोष्ठाय नमः

ஓம் வஹ்னிமூர்த்யதிபதயே ப்ரலம்போஷ்டாய நம: (நெருப்பு)

४. ओं वायुमूर्त्यधिपतये एकदन्ताय नमः

ஓம் வாயுமூர்த்யதிபதயே ஏகதந்தாய நம: (காற்று)

५. ओं आकाशमूर्त्यधिपतये अहिमेखलाय नमः

ஓம் ஆகாச மூர்த்யதிபதயே அஹிமேகலாய நம: (ஆகாசம்)

६. ओं इन्दुमूर्त्यधिपतये भक्ष्यप्रियाय नमः

ஓம் இந்து மூர்த்யதிபதயே பக்ஷ்யப்ரியாய நம: (சந்திரன்)

७. ओं अर्कमूर्त्यधिपतये गणाधिपाय नमः

ஓம் அர்க்க மூர்த்யதிபதயே கணாதிபாய நம: (சூரியன்)

८. ओं यजमानमूर्त्यधिपतये विघ्नेशाय नमः

ஓம் யஜமான மூர்த்யதிபதயே விக்னேசாய நம: (ஆன்மா)



## மெய்கண்டார் ஆகமப் பயிற்சி
## கோயிற்கலை-பண்பாட்டுப்
## பண்ணுட்டு நிறுவனம்

இந்நிறுவனம் சிவாகமங்கள், திருக்கோயில், வழிபாடு, சிவாகம சித்தாந்தம் தொடர்பாகவும் யாகசாலை, கும்பாபிஷேகம், பிரம்மோத்ஸவம் தொடர்பாகவும் ஆகமபாரதி என்னும் பட்டத்திற்குரிய பயிற்சி வகுப்பையும் ஆகமரத்னம் என்னும் பட்டத்திற்குரிய பயிற்சி வகுப்பையும் நடத்திக் கொண்டு வருகிறது.

கிரந்த எழுத்து வாயிலாக ஸம்ஸ்க்ருத மொழியையும் பயிற்றுவித்துக் கொண்டு வருகிறது.

இந்நிறுவனம் விரைவில் வெளியிட உள்ள நூல்கள்:

1. பாம்பன் சுவாமிகள் அருளிய திருப்பதிகம் (விளக்க உரையுடன்)

2. காமிக ஆகமக் கருத்துரைகள்

3. கிரணுகம சாரம்

விவரங்களுக்குத் தொடர்புகொள்க :

Director MIASTAC
P.O.Box 3473, Anna Nagar,
Madras-600 040